அதனை இந்தியாவெங்கும் பரப்பினர் எனக் கூறுகின்றார். இவருரைக்கும் இவ்வுரையோடு யாம் ஒருவாற்றல் இணங்குதலும் பிறிதொருவாற்றல் இணங்காமையும் உடையேம். யாங்ஙனமெனிற் காட்டுதும்:

இற்றைக்கு மூவாயிர ஆண்டுகளின் முன் மேற்றிசையிலுள்ள பினீசியர் என்னும் வகுப்பார் தென்னிந்தியாவின் மேற்கே மலையாளக் கரையினும், கிழக்கே உவரி, கொற்கை என்னுங் கடற்றுறைப் பட்டினங்களினும் வந்திறங்கித் தமிழரோடு வாணிகம் நடாத்தினர். அவர் தம் நாட்டுக்குத் திரும்பிப்போம்போது யானைக் கொம்புகள், தோகைமயில்கள், குரங்குகள், சந்தனக்கட்டைகள், விலை உயர்ந்த முத்துகள், அரிசி, கருவாப்பட்டை முதலிய சரக்குகளை ஏற்றிக் கொண்டுபோயினர். அவர்கள் சாலமன் என்னும் மேல்நாட்டரசன் காலத்திற் கூட்டங் கூட்டமாய் வந்தனரென்று ஈபுருமொழியில் எழுதப்பட்ட விவிலிய நூலால் நன்கறிகின்றேம். அந்நூலில் தமிழ்நாட்டுக் கடற்றுறைப் பட்டினமான உவரி என்பது ஓபிர்[1] எனவும், அவர் தமிழ் நாட்டிலிருந்து ஏற்றிக் கொண்டுபோன பொருள்களான, மயில், சந்தனம், அரிசி என்பவற்றின் பெயர்கள் தோகை, அனுகம், அரிசி எனவும் அவ்விவிலிய நூலில் எழுதப்பட்டிருக்கின்றன.[2] சாலமன் என்னும் வேந்தன் இற்றைக்கு மூவாயிரம் ஆண்டுகளின் முன் செங்கோலோச்சினனென்பது வரலாற்றுநூல் அறிஞர்க்கெல்லாம் ஒப்பமுடிந்தமையின், அவன்காலத்தில் தமிழ்நாடு போந்து தமிழரோடு வாணிகம் நடாத்திய பினீசியர் தாம் பயன் படுத்திவந்த எழுது

1. Ophir.
2. Max Muller's Science of Language, 1st Vol.

முறையைத் தமிழர்க்குங் கற்பித்தார். ஆயின், தமிழர் அவர் வருதற்குமுன் எழுதுமுறை அறியாரோ வெனின்; அற்றன்று. பினீசியர் வருதற்கு முன்னுந் தமிழர் அம்முறை நன்கறிந்தார் என்பது தேற்றமாம். யாங்ஙனமெனிற் காட்டுதும்: ஆசிரியர் தொல்காப்பிய ஞர் 'எழுத்ததிகாரம்' என ஒன்று வகுத்துக்கொண்டு எழுத்துக்களின் இலக்கணத்தைச் செவ்வனே கூறு கின்றமை யானும், எழுத்துக்கள் இல்லாவிடின் அங் ஙனமெல்லாம் இலக்கணங் கூறுதல் ஆகாமையானும் "உட்பெறு புள்ளி யுருவா கும்மே" என்னுஞ் சூத்திரத் தில் மகர எழுத்து முன் நாளில் எழுதப்பட்ட வரிவடிவும், "மெய்யி னியற்கை புள்ளியொடு நிலையல்" என்னுஞ் சூத்திரத்தில் மெய்யெழுத்துக்கள் புள்ளிபெற்று நிற்ற லும், "எகர ஒகரத் தியற்கையு மற்றே" என்பதனல் எகர ஒகர எழுத்துக்களும் அவ்வாறே பண்டைநாளில் புள்ளி பெற்று நின்றமையும், "புள்ளி யில்லா எல்லா மெய்யும், உருவுரு வாகி அகரமொடு உயிர்த்தலும், ஏனை உயி ரோடு உருவுதிரிந்து உயிர்த்தலும், ஆயீ ரியல உயிர்த்த லாறே" என்பதன்கண் மெய்யெழுத்துக்கள் உயிர் களோடு கூடியவழி வரிவடிவில் உருவு திரிதலும் இனிதெடுத்து ஓதினராகலானும், உரையாசிரியர் நச்சினர்க்கினியர் "உருவுதிரிந் துயிர்த்தலாவது மேலுங் கீழும் விலங்குபெற்றுங் கோடுபெற்றும் புள்ளி பெற்றும் புள்ளியுங்கோடும் உடன்பெற்றும் உயிர்த்த லாம். கி கீ முதலியன மேல் விலங்குபெற்றன. கு கூ முதலியன கீழ் விலங்குபெற்றன. கெ கே முதலியன கோடுபெற்றன. கா ஙா முதலியன புள்ளிபெற்றன. அருகே பெற்ற புள்ளியை இக்காலத்தார் காலாக எழுதி னர். மகரம் உட்பெறு புள்ளியை வளைத்தெழுதினர்.

கொ கோ ஔ ஓ முதலியன புள்ளியுங் கோடும் உடன்பெற்றன'' என்று உரை விரித்துக் கூறுதலானும் தமிழர் தமக்கென வேறெழுத்துடையரா யிருந்தன ரென்பது துணிபொருளாம்.

அற்றேல், பினீசியரால் தரப்பட்ட எழுத்துக் களுக்கும் தமிழர்க்கே உரிய எழுத்துக்களுக்கும் வேறு பாடு என்னை எனின்;—பினீசியர்க்குரிய எழுத்துக்க ளெல்லாம் வலதுகைப் புறத்திலிருந்து இடதுகைப் பக்கமாய் எழுதப்படுவனவாம்;[1] தமிழர்க்குரியனவோ இடதுகைப் புறத்திருந்து வலது பக்கமாய் எழுதப்படு வனவாம். இவ்வேறு பாட்டுடன், அவர் கொண்டு வந்தன உருவத்தானும் தமிழ் எழுத்துக்களின் வேரு வனவாம். எகுபதி நாட்டில் எழுப்பிய தூபிகளின் மேற் பொறிக்கப்பட்டிருக்கும் சித்திர எழுத்துக்களி னின்றுந் திரித்துச் செய்துகொண்டனதாம் பினீசியர்க் குரிய எழுத்துக்கள்; மற்றுத் தமிழ் எழுத்துக்களோ வெனின், அக்கடியர் என்னுஞ் சாதியார் பல்லாயிர மாண்டுகளின் முன்னே வழங்கிய முளை எழுத்துக்[2]களி னின்றுந் தோன்றி நடைபெறுவனவாம். அக்கடியர் என்னுஞ் சாதியாரும் பண்டைக்காலத் தமிழரும் ஒருவரே யென்பது திருவாளர் பண்டிதர் சவரிராயரவர் களாற் 'சித்தாந்ததீபிகை'யில் இனிது விளக்கப்பட்டது; அதன் விரிவு பின்னே காட்டுதும்.

இனிப், பௌத்த சமயம் விளக்கிய அசோக மன் னன் காலத்திற் செதுக்கப்பட்ட கல்வெட்டெழுத்துக் கள் இருவகைப்படுகின்றன. ஒன்று வலதுபுறத் திருந்து இடது பக்கமாகவும், ஒன்று இடதுபுறத்

1. Buddhist India, p. 114. 2. Cuneiform Letters.

திருந்து வலதுபக்கமாயும் எழுதப்பட்டிருக்கின்றன[1]. முன்னையது கபுர்த்தகிரிச் சிலாசாதனங்களிற் காணப் படுகின்றது; இது வட அசோகலிபி என்று சொல்லப் படும். பின்னையது அசோக வேந்தன் கல்வெட்டுக் கள் பெரும்பாலனவற்றிலுங் காணப்படுகின்றது; இது தென் அசோகலிபி என்று சொல்லப்படும். வட அசோகலிபி இந்தியாவின் வடமேற்குப் பாகங்களில் மட்டும் அருகி வழங்குகின்றது. தென் அசோகலிபி இந்தியாவிற் பெரும்பாலும் எங்கும் வழங்குகின்றது. ஆகையால், தென் அசோகலிபி இந்தியாவிலேயே பிறந்த எழுத்துக்களாகுமென்பது நன்கு பெறப்படும். என்னை? புறநாட்டிலிருந்து வந்த எழுத்துக்கள் இந்தியாவிலுள்ள இந்தியமக்கள் எல்லார்க்கும் விளங்காமையின் அவை அப் புறநாட்டை யடுத்த இந்திய எல்லையில் மட்டும் பயன்படுத்தப்பட்டன; உள்நாட் டெழுத்துக்கள் யார்க்கும் புலப்படுமாதலால் அவை இந்தியா வெங்கும் பயன்படுத்தப்பட்டுவந்தன. இங்ஙனந், தென் அசோகலிபி இந்தியாவிற்கே உரிய தென்பதனை இவ்வியல்பு முற்றவும் ஆராய்ந்த தாமஸ், கன்னிங்காம் என்னும் கல்வெட்டு ஆராய்ச்சி அறிஞர் இருவரும் நன்கு விளக்கினர்.

இனித், தென் அசோகலிபி என்பது தமிழ் வட் டெழுத்துக்களின் திரிபேயன்றி வேறென்று கூறுதல் ஆகாமையால், அது தமிழர்க்கே உரிய எழுத்தாமென்று நாட்டப்படும். வட அசோகலிபியும் தமிழர் வழியாய்ப் பெறப்பட்ட பினீசியர் எழுத்தேயல்லது பிறிதில்லை. இவ்வாறு எழுத்துக்களின் இருவகைப் பாகுபாடும் பொருந்தக் காட்டப்பட்டமையால் இந்தியாவில் வழங்

1. R. C. Dutt's Ancient India, p. 24, 2nd Vol.

கப்படும் எழுத்துப் பினீசியரிடமிருந்து போந்ததென்று உரைப்பார் உரையும், அற்றன்று அஃது இந்தியாவி லேயே பிறந்து வழங்குகின்றதென் றுரைப்பார் உரையும் தம்முள் முரணுமை காண்க. பினீசியரிட மிருந்து போந்ததெல்லாம் இந்திய வடமேற்கெல்லே யில் அருகி வழங்கும் வட அசோகலிபியே யாகுமென் பதூஉம், இந்தியாவிலேயே தோன்றிப் பண்டுதொட்டு நடைபெறுவது தமிழவட்டெழுத்தின் திரிபான தென் னசோகலிபியே யாகுமென்பதூஉம் பாகுபடுத்து விளங்க உணர்தல் வரலாற்றுநூல் வல்லார்க்கு இன்றி யமையாத கடமையாம். இவ்வுண்மை தேருது அவை யிரண்டினேயும் ஒன்றெனக் கூறி முடிபுரைத்தல் ஒரு சிறிதும் பொருந்தாதென்க.

இனி, ஆசிரியர் தொல்காப்பியஞர் சொல்லதிகார முதலிலேயே உலகியற் பொருள்களே உயர்திணே யென்றும் அஃறிணே யென்றும் பகுத்தோதினுர். சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் ஐம்பொறி யுணர்வோடு இவற்றைப் பகுத்துணர்கின்ற மனவறி வும் உடைய உயிர்களெல்லாம் மக்களெனப்படுவர் என்றும், இம்மக்களே உயர்திணே யாவரென்றும், ஐம்பொறி உணர்வு மட்டும் உடைய விலங்கு புள் முதலியனவும் உயிரில்லாத ஏனேச் சடப்பொருளுமாகிய எல்லாம் அஃறிணேயாமென்றும் இனிது விளக்கிச் சூத்திரஞ் செய்தருளினுர். ஆண் பெண் என்னும் பாற் பகுப்பும் உயர்திணேயில் மட்டும் தெற்றென விளங்கு தலின் அப் பாகுபாடும் உயர்திணேக்கே கூறி, ஏனே அஃறிணேயில் உயிருள்ள எறும்பு முதலியவற்றுள் அப் பகுப்பு அவ்வாறு விளங்காமையின் அதற்கது கூருராய் விடுத்தனர். எம் அரிய நண்பர்காள்! இப்

பாகுபாட்டின் அருமையும் நுட்பமும் நாமுணராதிருக்கின்றோம். பிற மொழிகளில் எங்காயினும் இத்தகைய நுண்பகுப்பு உளதா என்று ஆராய்வோமாயின் அப்போது இதன் பெருமை நன்கு தெளியக்கிடக்கும். ஆங்கில முதலான மேல்நாட்டு மொழியி லெழுதப்பட்ட இலக்கண நூல்களை இடைவிடாது எழுத்தெழுத்தாய் ஆராய்ந்து பார்ப்பினும் அவற்றின்கண் இவ்வரிய பெரிய இலக்கணப் பாகுபாடு ஒரு சிறிதுங் காணப்படாது; அன்றி, இந்திய நாட்டிற் சீர்த்திபெற்ற மொழியாய்ப் பயிலப்படும் வடமொழியிலேனும் இம்முறையுண்டோ வெனின் ஆண்டும் இதனைக் காணோம். இஃதொன்றோ, அவ் வடமொழியிலுள்ள சொற்பொருட் பாகுபாடுகள் நுண்ணறிவிற்குச் சிறிதும் இயையாவாறாய் அமைந்து கிடக்கின்றன. 'இல்லம்' 'வீடு' என்பன உயிரில்லாத அஃறிணைப் பொருள்களென்பதும், அவை தம்மை ஆண் பெண் என வழங்கல் நகையாடுதற் கேதுவா மென்பதுஞ் சிறுமகாரும் அறிவர். இங்ஙனமாகவும், வடமொழியில் 'கோயில்' என்னுஞ் சொல் ஆண்பாலாகச் சொல்லப்படுகின்றது; 'சாலை' என்பது பெண்பாலென்று சொல்லப்படுகின்றது. மயிர்க்கற்றை என்னும் பொருளுடைய 'கபரீ' என்பது பெண்பாலாம், 'கேசவேச' என்பது ஆண்பாலாம்; விருப்பம் என்று பொருள்படும் 'இச்சா' என்பது பெண்பாலாம்; 'மநோரத' என்பது ஆண்பாலாம்; மாலைப்பொழுது என்று பொருள்படும் 'திநாந்த' என்னும் ஒருசொல் ஆண்பாலாம்; 'சந்த்யா' என்னும் மற்றொரு சொல் பெண்பாலாம்; உலகம் என்று பொருள்படும் 'ஜகதோ' என்பது பெண்பாலாம்; 'லோக' என்பது ஆண்பாலாம்; சுவர் என்று பொருள்

படும் 'பித்தி' என்பது பெண்பாலாம்; 'குட்ய' என்பது அலிப்பாலாம்; காது என்று பொருள்படும் 'கர்ண' என்பது ஆண்பாலாம்; 'ஸ்ருதி' என்பது பெண்பாலாம்; 'ச்ரவண' என்பது அலிப்பாலாம். நண்பர்காள்! ஈதென்ன புதுமை பாருங்கள்! சடப்பொருளான இவையெல்லாம் ஆண் பெண் எனக் கூறினல் யாருக் குத்தான் நகை விளையாது. இவ்வாறு சொற்களை ஒரு வரன்முறையுமின்றித் தோன்றியவாறு ஆண் பெண் எனக் கூறி, அவைதம்மைச் சொற்றொடர்களில் இயைத்துக் கூறுங்கால் ஆண்பெயர்க்கேற்ப ஆண் வினையும் பெண்பெயர்க்கேற்பப் பெண்வினையும் கூட்டி யுரைக்கவென விதித்தால் இவை தம்மை அறிவுடை யோர் கற்க முந்துவரா? வேறு மொழி தெரிதற்கு வழியின்றி ஆரியத்திற் பிறந்து இடர்ப்படுவாரே அதனைக் கற்றற்கு உரியார். பொருள் வகையால் ஈது உயர்திணை, ஈது அஃறிணை யென்று வகுத்தால் பொருட்கேற்பச் சொற்களை வழங்குதலில் யார்க்கும் இடர்ப்பாடு தோன்ருது. பொருள் வகையால் அஃறிணை யென்றே உலகத்திற்கு ஒப்பமுடிந்த ஒரு சொல்லை ஒருகால் ஆணுகவும் ஒருகாற் பெண்ணுகவும் ஒருகால் அலியாகவும் கூறல் வேண்டுமென ஒருமுறையுமின்றி விதித்தால், இச்சொற்களை ஆராய்ந்து இவை ஆண், இவை பெண், இவை அலி என உறுதி செய்தலி லேயே மாணக்கர்க்கு வாணுள் கழியும். இனி, இவற்ருற் பெறப்படும் பொருளை யுணர்ந்து அதனை உரிமை கோடற்கு வாணுள் எங்கே உளது? சில் வாழ்நாட் பல்பிணிச் சிற்றறிவினரான மக்கள் தம் முயிர்க் குறுதிபயக்கும் உண்மைப் பொருளை உணர் தற்கு ஒரு கருவியாயமைந்த மொழி கற்றற்கும் பயன்

படுத்தற்கும் எளிதாக இருத்தல்வேண்டுமே யல்லது, கடின சொல்லுடைத்தாதல் பயனின்றாம். கருவியே பெரிதிடர் பயப்பதாயின் அதனாற் பெறப்படும் பொருள் பயன்தருவ தியாண்டுமில்லை யென்க. இத்துணைக் கடினச் செவ்வி யுடைமையினாலன்றோ வடமொழி உலக வழக்கின்றி இறந்தொழிந்தது. திருஞானசம் பந்தப் பெருமான் முதலான அருட்டிருவாளரும் முழு முதற்கடவுளை வழிபட்டுய்தற்குரிய எளிதான நெறி யைச் செந்தமிழ்த் திருப்பாட்டுக்களிலே அருளிச் செய்வாராயினர். இப்பெற்றி இனிது தேர்ந்தே,

“கண்ணு தற்பெருங் கடவுளுங் கழகமோ டமர்ந்து
பண்ணு றத்தெரிந்தாய்ந்தவிப் பசுந்தமிழ் ஏனை
மண்ணி டைச்சில இலக்கண வரம்பிலா மொழிபோல்
எண்ணி டைப்படக் கிடந்ததா எண்ணவும் படுமோ.”

என்று திருவிளையாடற் புராண முடையாருங் கூறினர்.

செந்தமிழ் நண்பர்காள்! இற்றைக்கு நாலாயிரத்து முந்நூறு ஆண்டுகளின் முன்னரே தமிழ்மக்களும் தமிழ் இலக்கண ஆசிரியரும் உயர்திணை அஃறிணைப் பாகுபாடு பொருள் வகையால் இயற்கைநெறி திறம் பாதே உணர்ந்து அறிவுடையார் எல்லார்க்கும் ஒப்ப முடிவதாக விளக்கிய அரிய நுண்ணறிவாற்றல் நுங்க ளாற் பெரிதும் போற்றற்பாலதேயாம். இன்னோரன்ன வற்றை இதுகாறும் பொதுவாக நினைத்து வந்தது போல் நினையன்மின்! பண்டைத் தமிழ் நூல்களிற் சொல்லப்பட்ட ஒவ்வொரு பொருளும் கிடைத்தற்கரிய முழுமாணிக்கங்களாமென்று தேர்மின்கள்! இவ்வரும் பெறல் மாணிக்கங்களெல்லாம் வரன்முறையே தொகுத்த தொல்காப்பியம் விலை வரம்பு அறியாக் களஞ்சியம் என்று ஆராய்ந்து வியப்பெய்துமின்கள்!

இனி, நீர் வேட்டுச் செல்கின்றான் ஒருவன் நறு மணங்கமழும் இளமரக்காவின் இடையிடையே தங்கி அயர்வு சிறிது ஒழிந்து முப்பழச் சாறுந் தேனும் விரசி னாற்போற் சுவைக்கும் தெண்ணீர் நிரம்பிய நீர் நிலையிற் சென்று நீர் ஆரப்பருகி வேட்கையொழிந்து அயர்வு முற்றும் நீங்கினாற்போல, ஆசிரியர் தொல்காப் பியனார் திருவாய்மலர்ந்தருளிய எழுத்ததிகார சொல் லதிகாரங்களினிடையே தங்கித் தமிழ்ப்பெருமை தெரியா அறியாமை சிறிது சிறிதே ஒழிந்து இப்போது பொருளதிகாரத்திற் சென்று ஆண்டுவிரிந்த நுண் பொருட்டொகுதியில் ஒன்றிரண்டு நுகர்ந்து எமதறி யாமை முற்றும் போக்குவாம். நண்பர்காள்! ஆசிரியர் பொருளை அகம் புறம் எனப் பகுத்த முறையே பெரிதும் நுண்ணறிவு நிறைந்ததாம். உயிர்களின் அறிவு நிகழ்ச்சியே அகம் புறம் என இருதிறப்படுகின் றன. உயிரினுள் நிகழும் அறிவு அவ்வுயிர்க்கே புல னாவதாம். உயிர்க்கு ஓர் உடல் படைக்கப்படா முன் னெல்லாம் அதன் அறிவு புலப்பட்டு நிகழாதாய்ச் செயலின்றி மழுங்கிக் கிடந்தது. இனி அவ்வறிவு அங்ஙனம் மழுங்கிக்கிடக்கவொட்டாது அதனை எழுப்பி விரிவு செய்தற்பொருட்டு அதற்கோர் உடல் தரப்பட்ட தாகலின், உயிர் உள்ளறிவு புறப்பொருளோடு இயைந்துநின்று அம்முறையே பெருகுதற்கு இவ் வுடம்பு இடைநின் றுதவுவதொன்றாம். இதனால், அகம், நடு, புறம் என்னும் மூவகை பெறப்படுகின் றன. அகம் அறிவு, நடு உடம்பு, புறம் பொருள் என ஆகும். கண் ஒருபொருளைக் காண்டற்கு ஞாயிறு விளக்கமாய் இடைநின்று காட்டுதல்போல உயிரறிவு புறப்பொருளைப் பற்றுதற்கு உடம்பு ஒரு விளக்கா

மென்க. இதுபற்றியே மெய்கண்டதேவர் "மாயா தனுவிளக்கா மற்றுள்ளங் காணுதேல், ஆயாதா மொன்றை" என்றருளிச் செய்தார். இவ்வுலகிலுள்ள எல்லாப் பொருட்குணமும் நுட்பவடிவமாய் இவ்வுடம் பிற் பொருந்திக் கிடக்கின்றன; இவற்ருேடு வேறற ஒற்றுமைப்பட்டு நிற்கின்ற உயிரறிவு அவற்ருல் இன்ப துன்பநுகர்ந்து அறியாமை நீங்கி விளக்கமுடையதா கின்றது. வெளியே தோன்றும் எல்லாப் பொருட் குணங்களும் இவ்வுடலென்னும் பளிக்குப்பாறையிலே வெளிப்பட்டுத் தோன்றுகின்றனவாகலின், இதன் நடு வில் வாழ்கின்ற உயிரறிவு இவையனைத்தையும் உணர வல்லதாகின்றது. ஆகவே அகத்தே தோன்றும் உயிரின் அறிவொழுக்கங்களெல்லாம், புறத்தே அவற்றை எழுப்புதற்குக் காரணமாயுள்ள பொருட் பாகுபாட்டுடன் பொருந்தியே இருக்கும். இந்நுட்ப மெல்லாம் முற்றவும் அறிந்த ஆசிரியர் அகவொழுக் கத்தைக் கைக்கிளை முதற் பெருந்திணை இறுதியாக எழு கூருகப் பிரித்தார்; அங்ஙனம் பிரித்ததற்கேற்பவே அவற்ருேடு ஒற்றுமையுடைய புறப்பொருளையும் எழு கூருக்கினுர்.

இனி ஒருயிர் பிறிதோர் உயிரோடு பொருந்தும் வழிப் பிறக்கும் இன்பதுன்ப நுகர்ச்சியெல்லாம் ஆசிரி யர் ஒருங்கே விளக்கியுரைக்கும் திறம் மிகப் பெரிது. இவர்போல் உயிர் இயற்கை முழுதுணர்ந்து உரைத்த வேறு புலவர் ஆங்கிலமொழி வல்ல செகப்பிரியர் ஒருவரேயாம். அகத்தே தோன்றும் அவ்வின்பதுன்ப நிகழ்ச்சிக் கேற்ற இடம் பொழுது முதலாக ஆசிரிய ரான் ஆராய்ந்துரைக்கப் பட்டனவெல்லாம் இன்று காறும் உலக இயற்கை பிழையாது வருகின்றன. இங்

னம் உலக இயற்கை முழுதுணர்ந் திலக்கண முரைத்த ஆசிரியரை வேறு எத்தேயத்தினும் எந்த மொழியினுங் காண்டல் அரிது அரிது.

இனி, உயிரின் அகத்தே தோன்றும் உணர்வு நிகழ்ச்சிகளெல்லாம் இவ்வுடம்பின் புறத்தே முகத்திற் றோன்றுமென்பது 'மெய்ப்பாட்டியலில்' வரம்பு செய் துரைக்கப்பட்டது. இன்னும் அம்முகத்திற் கண்களி லேயே அக நிகழ்ச்சி முழுது முணரப்படுமென்று விளக்கி,

"நாட்ட மிரண்டு மறிவுடம் படுத்தற்குக்
கூட்டி யுரைக்குங் குறிப்புரை யாகும்."

என்று கட்டளை யிட்டருளினர். தெய்வப்புலமைத் திருவள்ளுவரும் இதனைச் சிறப்பித்துக் கூறுமாறு காண்க. உரிமை நண்பர்காள்! உலக இயற்கை உயிர் இயற்கைகளெல்லாம் இங்ஙனம் வரைசெய்து இலக் கணமெழுதிய ஆசிரியர் தொல்காப்பியனரை ஒத்த ஆசிரியரையாயினும், அல்லதவர் அருளிச்செய்த தொல்காப்பியம் போன்ற பிறிதொரு நூலையாயினும் இற்றைக்கு நாலாயிர ஆண்டுகளின்முன் நாகரிகமெய் திய எத்தேசத்திலாயினும் எம்மொழியிலாயினுங் காட்டுதல்கூடுமா? நடுநிலைதிறம்பா துரைமின்கள்!

இனி, இவ்வுலகத்தின் உள்ளும் புறம்புமாய் நின்று அறியவல்லதை அறிவித்தும் அசைய வல் லதை அசைவித்தும் பேரொளிப் பிழம்பாய் அருவாய் அறிவாய் இன்பமாய் விளங்கும் முழுமுதற் கடவுள் நிலையைச் சுட்டி ஆசிரியர் தொல்காப்பியனர் இற் றைக்கு நாலாயிர ஆண்டுகளின் முன்னே நிறுவிய பொருட்டிட்பத்தை அதேகாலத்திற் றோன்றிய ஆரிய

சாதியார் நூல்களிற் சொல்லிய தெய்வநிலையோடு ஒப்பிட்டுக் காண்போமாயின் தமிழரது பண்டைக்கால நாகரிக வளம் மேலும் மிக்குவிளங்கும்.

ஆசிரியர் "கொடிநிலை கந்தழி வள்ளி" என்ற சூத்திரத்தில் 'கந்தழி' என்னும் முழுமுதற் பரம்பொருள் 'ஒரு பற்றுமற்று அருவாய்த் தானே நிற்குந் தத்துவங் கடந்தபொருள்' என்று வலியுறுத்தார். இஃததற்குரை கண்ட நச்சினார்க்கினியர் கூறுமாற்றான் நன்கு பெறப்படும். இதனாற் கந்தழி எனப்படுங் கடவுள் சித்து சடம் என்னும் இருவகை யுலகினுள்ளும் ஒன்றன்றாய் இவை தம்மையெல்லாம் முற்றும் சூழ்ந்துகொண்டு எவ்வகைப்பற்றுமின்றி நிலைபெறும் பேரின்ப நிலையமென்பது பெற்றாம். அத்துணைப் பழைய காலத்தே கடவுட்டன்மையினை இவ்வாறுணர்ந் துரைத்தவர் உலகில் வேறு யாண்டுங் காணப்படார். மிகவும் பழைய நூலான இருக்குவேதத்தை ஆராய்ந்து பார்மின்! இருக்குவேத காலத்து ஆரியர் ஒளியுடைப் பொருளையும் அவற்றோடு தொடர்புடையவற்றையும் தெய்வங்களாக வழிபட்டு வந்தனர். இதற்குத் 'தேவ' என்னுஞ் சொல்லே சான்றாம்; இச்சொல் 'ஒளி' என்று பொருள்படும் 'திவ்' என்னும் வேர்ப்பொருளினடியாகப் பிறந்ததாகும். ஆகவே, ஒளியுற்று விளங்கும் விண்ணையும், வான்மீன்களையும், கதிரவனையும், விடியற் காலத்தையும், நண்பகற் பொழுதையும், பிறவற்றையுந் தெய்வங்களாகத் துணிந்து வழிபடுவாராயினர். இன்னுந் தேவர்களெல்லாம் வான் நிலன் என்னும் இரண்டின் பிள்ளைகளென்றும் ஆண்டாண்டு அந்நூலிற் சொல்லப்பட்டனர். 'சோம' என்னும் ஒருவகைப் பூண்டை நசுக்கிப்பிழிந்தெடுத்த இரசம் மதுக்

களிப்பைத் தருவதெனவும் இச் சோமரசமே வான், நிலன், நெருப்பு, கதிரவன், இந்திரன், திருமால் என்னுந் தெய்வங்களை யெல்லாந் தோற்றுவித்த தெனவும் ஒரு சில இடங்களில் இருக்கு வேதங் கூறுகின்றது. வேறு சில இடங்களில் சாவித்திரியும் நெருப்பும் தேவர்கட்கு இறப்பில்லா வரம் அருளிச் செய்தனர் என்கின்றது. மற்றுஞ் சில இடங்களில் எல்லாத் தேவர்களும் ஒரே வகையான ஆற்றலுடையரென் றுரைத்துப் போய்ப் பின் நெருப்பு, இந்திரன், கதிரவன் எனும் மூவரே மற்றை எல்லாரினுஞ் சிறந்தோராவ ரென்கின்றது. இன்னும் இவரைத் தவிரத் தயஸ், பிரிதிவி, அதிதி, ஆதித்யர், வருணன், பர்ஜன்யன், வாயு, மருத்துக்கள், மித்திரன், பூஷன், உஷஸ், அசுவினிகள், த்வஸ்திரி, ரிபுக்கள், விசுவகர்மன், ப்ரஜாபதி, ப்ருகஸ்பதி, வாக், சோம, ருத்ர, யமன் விசுவ தேவர்கள், பித்ருக்கள் முதலாகத் தேவர் பலப்பலர் கூறப்படுகின்றனர். இங்கே விஷ்ணு என்று சொல்லப்பட்ட தெய்வம் திருமால் அன்று. சூரியனே, காலை நண்பகல் பிற்பகல் என்னு முப்பொழுதினும் வான் கடந்து செல்லு நிலையில் விஷ்ணு வென்னும் பெயரோடு பொலிகின்றான் என்று சொல்லப்பட்டிருக்கின்றது. உருத்திரன் என்று சொல்லப்பட்ட தெய்வம் சிவபிரான் அன்று; சூறுவளிக்குத் தெய்வமே உருத்திரன் என்று ஆண்டுச் சொல்லப்பட் டிருக்கின்றது. 'ருத்ரன்' என்னுஞ் சொல்லுக்கு வேர்ப்பொருள் 'முழக்கமிடுவோன்' 'ஊளையிடுவோன்' என்பனவாம். இவ்வேற்றுமைதெரியாதார் உருத்திரனுஞ் சிவனும் ஒருவரேயெனத் தமக்குத் தோன்றியவாறே மொழிவர். 'சிவம்' என்பது கந்தழி என்னும் வேறு பெயருமுடைய பரம்

பொருள்; அஃது உருத்திரன் பிரமன் என்றற் றொடக்கத்துத் தேவர்கட்கெல்லாம் அப்பாற்பட்டதொன்றும்; இவ்வுண்மை,

"தேவர்கோ வறியாத தேவ தேவன் செழும்பொழில்கள்
பயந்துகாத் தழிக்கு மற்றை
மூவர்கோ னாய்நின்ற முதல்வன்."

என்ற மாணிக்கவாசகப் பெருமான் அருமைத் திருவாக்கானும் நன்று தெருட்டப்படும். இருக்கு வேதம் முழுவதும் துருவித் துருவிப் பார்ப்பினும் 'சிவம்' என்னும் பரம்பொருளியல்பு காணப்படமாட்டாது. அங்கெல்லாம் உலக இயற்கைப் பொருள்களாற் றாம்பெறும் பயன் குறித்து அவைதம்மையெல்லாம் தம் அறியாமையாற் றெய்வங்களாகக் கருதி ஆரியமக்கள் வழிபட்டு வந்த கீழ்நிலை அறிவு புலப்படக் கிடக்குமேயல்லது, பரம்பொருட் சொரூப முணர்ந்த மேல்நிலை அறிவு சிறிதாயினும் ஆண்டுப் பெறப்படுதலில்லை. அறிவிற் சிறந்த தமிழ் மக்காள்! இங்ஙனம் வேதத்தின் உண்மைகூறி மாந்தர்க்கு அறிவு கொளுத்த வருவாரைக் கண்டு மனம் புழுங்கி உயர் குலத்தினரெனத் தம்மை இறுமாந் தெண்ணியிருப்பார் சிலர் 'அவைதிகர்' எனப் புறம்பழிப்பர். அவர் கூறும் அப் புறம்பழிப்புரைக்குச் சிறிதும் அஞ்சன்மின்! எவர் யாது கூறினும் உண்மை கரக்கப்படாதென்க. இத்துணைக் கீழ்நிலை அறிவையே போதித்துப் பயனின்றி விரிந்துகிடக்கும் அவ்வேதத்தைப் பிரமாணமாகக் கொள்ளாதவர் என்று எம்மைப் புறம்பழிப்பதுபற்றி நம்மனோர்க்கு வரும் இழுக்கென்னை? ஒருசிறிது மில்லையாகலின், நாம் தத்துவ வுரிமை

கைவிடாமாய் மெய்ப்பொருள் கூறுதலையே கடைப் பிடிப்பாமாக. நமக்கும் மற்றும் அறிவுடையார் எல்லார்க்குஞ் சிறந்த பிரமாண மெய்ந்நூல்களாயுள்ள தொல்காப்பியம், திருக்குறள் முதலியனவே நமக்குச் சாலுமென்று மனந்திருந்துமின்கள்! பிறர் கூறும் பகட்டுரைக்கஞ்சி உண்மையைக் கைவிட்டு விடாதீர்கள்!

இனிச், சிவம் என்னும் அப் பரம்பொருள்நிலை அவ்விருக்குவேதத்திற் கூறப்படாததுகொண்டு அதன் பெருமை குன்றுமாறில்லை. பரப்பிரமப்பொருள்நிலை யறியமாட்டாத அறிவில்லாப் பிள்ளைமைப் பக்குவத்தின் கண்ணரான ஆரியமக்கள் செய்த அவ் விருக்கு வேதத்திற் கழிபெருநுண்ணறிவாற் றமிழ்நன்மக்களறிந்த அம்முழுமுதற் பொருள்நிலை எவ்வாறு காணப்படும்? சிறார் இழைத்து விளையாடும் மணற்சிற்றிலிலே நுண்ணறிவுவாய்த்த தச்சரியற்றும் அழகிய மாடங்கள் காணப்படுதலுண்டோ? எந்த நுண்பொருள் எவர் வயின் வருமோ அஃது அவர்பாலே ஆராயற்பாலதாம். அஃதொழிந்து ஓர் அறிவுடையாரிடத்துப் பெறப்படும் ஓரும்பொருளை ஏனையோர் அறிவிலாரிடத்துக் கேட்க முந்துவாரைப்போல் தமிழ்நூற்களிற் குறிக்கப்படும் அந்தரங்க மெய்ப்பொருட்குப் பிரமாணம் வடநூலிற் றேடுதல் பெரிதும் நகையாடி இகழற்கே ஏதுவாம். இவ்வாற்றல் யாம் வடநூல்களை இகழ்கின்றேம் என்று நினையன்மின்! யாம் அவற்றின் உண்மைத்தன்மை கூறியதே யன்றிப் பிறிதில்லை. இனி வடநூலிற் சிறந்த நுண்ணறிவு காணப்படும் சாங்கியம், உபநிடதம், வேதாந்த சூத்திரம், சிவாகமம் முதலியவற்றை இங்ஙனந் தாழ்த்

துக் கூறுதற்கு யாம் ஒரு சிறிதும் ஒருப்படேம் ஒருப்ப டேம்.

இனி அவ்விருக்குவேதத்திற் போந்த அப் பல் தேவர் வழிபாடேனும் விழுப்பமுடையவா வென்று ஒருசிறிது ஆராய்வாம். மதுக்களிப்பை விளைத்து அறிவை மயக்கி மழுக்கும் சோமரசபானத்தைச் சிறப் பித்துப் புகழ்ந்த பதிகம் ஒன்றனை இங்கே மொழி பெயர்த்து வரைகின்றும்; அதுகொண்டு அவ்விருக்கு வேதப்பான்மை அறிவுடையார்க்கு எல்லாம் இனிது விளங்கக்கிடக்கும்.

**இருக்குவேத ஒன்பதாம் மண்டிலம்,**

**முதற்பதிகம் சோமபவமானம்.**

இந்திரன் பருகுதற்பொருட்டு நறுக்கிப்பிழிந்த
ஓ சோமரசமே! மிகத் தித்திப்பதாய் மகிழ்ந்த செலவினை
யுடைய நீரோடைபோல் சுத்தமாய் நின்வழியே ஒழுகுக. (க)

பகைவரை யடக்குவோய்! மக்களெல்லார்க்கும் நட்பாள!
அப்பரிசையால் அவன் தன் உயர்நிலையையும் இருப்பரணையும்
அடைந்தான். (உ)

நீ விருத்திரனைக் கோறற்குச் சிறப்புடையை யாகுக,
இன்பந் தருதற்குத் தலைமையுடையை யாகுக, மிகுந்த
வள்ளன்மை யுடையை யாகுக: செல்வமிகுந்த எம்
இளவரசர் கொடையை விருத்திசெய்க. (ங)

வலிய தேவர்கட்கு ஆற்றும் விருந்திற்கு நினது இரசத்
தை ஒழுகச்செய்க: எங்கட்கு வலிவும் புகழும் உண்
டாதற்பொருட்டு இங்கே வருக. (ச)

ஓ இந்துவே! நாளுநாளும் இவ்வாறே கருத்தோடு
நின்னருகே வருகின்றோம்: நினக்கே எம் வேண்டுகோள்
மந்திரங்கள் சொல்லப்படுகின்றன. (ரு)

சூரியன்புதல்வி என்றும் யாட்டுமயிர்க் கம்பலத்தால்
நின் சோமரசத்தை வடித்துச் சுத்தியாக்கி ஒழுகவிடுகின்றாள். (சு)

மெல்லியரான பதின்மர்தோழிமார் நறுக்கும் இயந்திரத்தில்
அவனைப்பிடித்துவைத்து முடிவுநாள் வரையில் அவனை விடாது
கொண்டிருக்கின்றனர். (எ)

அக்கன்னிமகளிர் பின் அவனைப் போகவிடுகின்றார்: இசை
கூட்டுவானைப்போல் அவர்கள் துருத்தி ஊதிப்
பகைவரை ஓட்டும் முக்கூட்டுப் பானத்தை
உருகச்செய்கின்றனர். (அ)

இந்திரன் பருகுதற்பொருட்டு, ஊறுசெய்யப்படாத பால்
ஆக்கள் அவனைச் சுற்றிலுங் கூடியிருந்து புதிய இளஞ்
சோமரசத்தில் தமதுபாலைக் கலப்பிக்கின்றன. (கூ)

இவ்விரசத்தைப் பருகின பெருங்களிப்பால் இந்திரன்
விருத்திரரை எல்லாம் கொல்கின்றான்: அவன் தன்செல்வத்
தை நமக்குச் சொரிந்து தருகின்றான். (க0)

இப்பெற்றியவாம் பதிகங்களே இருக்குவேதம் முழுவதும் நிரம்பிக் கிடக்கின்றன. இன்னோரன்ன பதிகங்களிற் காணப்பட்ட வழிபாடுகள் இன்றும் மிக மந்த பக்குவமுடைய மாக்கள் நாடுகளிற் காட்டேரி, இருளன், கறுப்பன் முதலிய சிறு தெய்வங்களை வழிபட்டு வரும் முறைகளோடு ஒத்திருக்கின்றனவே யல்லது வேறென்னை? இன்னும் ஆரியர் சோமரச பானத்தான் வேள்விகள் வேட்டதன்றியும் வெள்ளாடு கள், செம்மறியாடுகள், பசுமாடுகள், எருமை மாடுகள்,

குதிரைகள், மனிதர் முதலிய எண்ணிறந்த உயிர்களைக் கொன்றுவேட்டு அவற்றின் ஊனைப் புசித்து வந்தார்கள். மனிதன் மனிதனைக் கொன்று புசிக்குஞ் செய்கை எவ்வளவு கொடுமையான செயல்! நக்கவாரம் முதலிய தீவகங்களில் வசிக்கும் மிக்க அநாகரிக சாதியாரே இன்றும் மனித ஊன் புசித்து வருகின்றனர். உயிர்களில் மனிதர்க்குப் பலவகையாலும் பயன்படுதலுடைய பசுமாடு, குதிரை முதலியவற்றைச் சிறிதும் இரக்கமின்றிக் கொன்று அவற்றின் ஊனைவிரும்பி வேண்டியமட்டும் புசித்து வந்தனராயின், பண்டைக் கால ஆரியசாதியார் எவ்வளவு கொடியவர்களென்றும் எவ்வளவு அறியாமை யுடையவர்களென்றும் எண்ண வேண்டி யிருக்கின்றது! இவ்வளவு கொடுஞ் செயலுஞ் செய்துகொண்டு, இக்கொடுஞ்செயலுக் குதவியாகத் தாம் பாடி வைத்துக்கொண்ட இழிந்த வேதப்பாட்டுக்களைத் தம்மின் வேருன தமிழ்மக்களும் ஒருப்பட்டுத் தழுவிச் சிறப்பிக்கும்படி வற்புறுத்து வரும் அவர் செயல் நினையுங்காலெல்லாஞ் சாலவும் வஞ்சனை யுடைத்தென்று தோன்றுகின்றது. இத்தகைய கொடுஞ் செய்கையுஞ் சுவர்க்கத்தைத் தருமென்ற அவரது போலிப் பொய்யுரையை மறுத்தற்கன்றே நம்முது குரவரான தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனுர்,

"அவிசொரிந் தாயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர்செகுத் துண்ணுமை நன்று."

என்று திருவாய் மலர்ந்தருளினுர். சாங்கியம் என்னும் அரிய தத்துவநூல் வகுத்தெழுதிய பேரறிவாளரான கபிலரும் "கணக்கில்லாப் பிராணிகளைக் கொல்வித்து அவற்றின் இரத்தத்தை ஆருய்ப் பெருகச் செய்வித்த

லின் வேதங்கள் அசுத்தமுடையன.''[1] என்று ஓதினர். அதுநிற்க.

இனி, மேற்கூறியவாறு இருக்குவேதம் முதலியன சாமானிய பௌதிக வழிபாட்டில் தலைநின்றனவாயினும், அவ்வேத முடிபான உபநிடதங்களும் சாங்கியம் வேதாந்த சூத்திரம் முதலியனவுமெல்லாம் உயர்ந்த தத்துவ நுண்பொருள் போதிக்கக் காண்டலின் ஆரியமக்கள் பிற்றைஞான்று பேரறிவுடையராயினரென்னுமோ வெனின் ;—என்னும். உபநிடத முதலான ஞானநூல்கள் ஆரியமொழியில் எழுதப்பட்டிருத்தல்பற்றி அவை ஆரியமக்களாற் செய்யப்பட்டன வென்றல் வழுவாம்.

பண்டைநாளில் தமிழ்மக்கள் வடக்கே இமயமலைச் சாரல்வரையிலும், மேற்கே ஆப்கானிஸ்தானம் வரையிலும் பரவியிருந்தனர். இதற்கு அறிகுறியாக இன்றும் ஆப்கானிஸ்தானம் பெலுசிஸ்தானம் என்னும் நாடுகளில் தமிழோடு மிக்க தொடர்புடைய பிராகி என்னும் மொழி வழங்கப்பட்டு வருகின்றது. இமயமலைச் சாரலில் வாழும் குன்றவர்களெல்லாரும் தமிழின் றிரிபான ஒரு மொழி வழங்கிவருகின்றனர். இதுவேயன்றி வடநாட்டிற் பழைய பல ஊர்களெல்லாந் தமிழ்ப் பெயர்பெற்று விளங்குகின்றன. 'தமிழூக்' என்னும் ஊர் வடநாட்டிலிருத்தல் யாருமறிந்த தொன்றேயாம். இஞ்ஞான்றும் வடநாட்டி லிருப்போரிற் பெரும்பாலார் பண்டைக்காலத் தமிழ் மரபினரேயாவர். மொழி காலவேறுபாட்டால் வேறுபடினும் மக்கள் சாதிப்பிறப்பு யாண்டும் ஒருதன்மை

1. சாங்கியகாரிகை.

யாகவே யிருக்கும். முன்னாளிற் றமிழர் மிகப் புகழ் பெற்று வாழ்ந்தபோது வடஆசியாவிலிருந்து சிந்து நதிப் பக்கமாய் ஆரியமக்கள் இந்தியாவினுட் புக, உள்ளிருந்த தமிழர் இயற்கையிலே விருந்து வருவாரை ஓம்பிப்போற்றுங் கடப்பாடுடையராதலால் தம் நாடு தேடிப் பிழைக்கவந்த ஆரியமக்களை நல்வரவாக ஏற்று அவர்க்கு வேண்டுவன தந்து ஓம்பினர். ஆரியர் வருங் காலத்துத் தமிழர் மிக்க நாகரிக வாழ்வுற்றிருந்தன ரென்பதை இருக்குவேத வுரைகொண்டு முன்னரே இனிது விளக்கினும். இனி, அங்ஙனம்போந்த ஆரிய மக்களோடு தமிழர் பெரிதும் அளவளாவினராகலின், அவர்க்குரிய ஆரிய மொழியினையுந் தாங்கற்று அதனையும் பண்படுத்துவந்தனர். ஆரியமக்கள் செய்யும் வேள்வி விழாக்களுக்குத் தாமும் பொருளுதவி செய்து அவற்றை நடைபெறுவித்து வந்தனராயினும், அவ் வேள்விவேட்டல் சிறிதும் பயன்படாமை அறிவித்து அவர்க்குத் தத்துவ நுண்பொருள்களையுந் தமிழர் ஆங்காங்கு உணர்த்துவாராயினர். புதியராய் வந்தோர் தாம் வழக்கமாக மேற்கொண்டு செய்யும் ஒரு கருமத்தைச் சடுதியிற் செய்யவேண்டாமென்று நிறுத்தினல் அவர்மிக மனம் வருந்துவராகலின், அவர்க்கு முதலில் உதவியாளராய் நின்று அவர் வேண்டிய வேள்விக் கன்மங்களையும் நடாத்திவந்த தமிழர் பின் சிறிது சிறிதே அவர்க்குத் தத்துவ நுண்பொருளறிவு கொளுத்திவேள்விவேட்டல்பயன்படாமையேயன்றித் தீவினையுடைத்தாதலுங் காட்டுவர். இங்ஙனந் தமிழாசிரியர் காட்டிய அறிவுமொழிகளே உபநிடதங்களென்று பிற்றைஞான்று பெயர் பெறலாயின. உபநிடதங்களெல்லாம் ஒரு முகமாய் நின்று வேள்விவேட்ட

லாகாதென்றும், மக்களெல்லாருந் தத்துவஞானந் தலைப்படுதல் வேண்டுமென்றும் வற்புறுத்துகின்றன. வேதங்களிற் சொல்லிய கன்மங்களுக்கு முற்றும் மாறுபாடாய் நின்று அவை தம்மைப் பழித்துத் தத்துவஞான மேம்பாடு புலப்படுக்கும் பெற்றியனவாம் அவை வேதாந்தமெனவும் பெயர்பெறுகின்றன. வேதமும் வேதாந்தமும் தம்மிற் பெரிதும் முரணி நிற்பனவாம். வேதம் கன்மங்களை மிக்கெடுத்துக் கூறுவன; வேதாந்தம் அவற்றைப் பழித்து ஞானத்தை மிக்கெடுத்துக் கூறுவன; வேதம் ஆரிய மக்களாற் செய்யப்பட்டன; வேதாந்தம் தமிழ்மக்களாற் செய்யப்பட்டனவாம். வேதமட்டும் அறிந்த ஆரியர் வேதாந்தமறிந்த தமிழர்பால் அதனைக் கற்றறிவாராயினர். பண்டைக் காலத் தமிழர்க்குட் புகழ்பெற்ற வேந்தராயிருந்த சனகன் சைவலி, அசாதசத்துரு முதலிய மன்னர் மன்னர் ஆரியர்க்கு வேதாந்தம் உணர்த்திய வரலாறு சதபாதபிராமணம், உபநிடதம் முதலிய நூல்களாற் றெற்றென விளக்கப்படுகின்றது. தமிழமன்னரும் அம்மன்னர் குடியாரும் ஆரியரால் அரசினியார் என்றழைக்கப்பட்டவாறு முன் இனிது விளக்கிப் போந்தாம். அப்பெற்றியராம் 'ராஜந்யர்' ஆரியர்க்குத் தத்துவஞானம் புலங்கொள அறிவுறுத்து வந்தமைக்கு ஈண்டு இரண்டோர் உதாரணங் காட்டுதும்:

சதபாதபிராமணம் கக-ஆம் புத்தகம்

"விதேகர்கட்கு மன்னனான சனகன் அப்போதுதான் வந்த பிராமணர் சிலரைச் சந்தித்தான். அங்ஙனம் சந்திக்கப்பட்டவர்கள் சுவேதகேது ஆருணேயர், சோமசுஷ்மசத்தியஞ்ஞர், யாஞ்ஞவற்கியர் என்ப

வராம். அவன் அவர்களை நோக்கி: 'நீங்கள் அக்நி ஹோத்திரத்தை எவ்வாறு செய்கின்றீர் கள்?' என்று வினவினன். பிராமணர் மூவரும் தம்மாற் கூடியவரையினும் விடை கூறினராயி னும், அவர் கூறிய தொன்றேனும் திருத்தமான தன்று. யாஞ்ஞவற்கியர் கூறியது சிறிது பொருந் தினும் அதுவும் முற்றும் திருத்தமாகவில்லை. சனகன் அவ்வளவுதானேவென்று சொல்லி விட்டுத் தன் இரதத்தின்மேலேறிப் போயினன். அக்குருக்கள் மூவரும் 'ராஜந்ய வகுப்பைச் சேர்ந்த இப்பயல் நம்மை அவமானம் செய்தனனே' என்று கூறினர். யாஞ்ஞவற்கியர்மட்டும் இரதத் தின் மேலேறி அவ்வரசனைத் தொடர்ந்துபோய் அவனால் அதன் நுண்பொரு ளறிவிக்கப்பட்டுத் தமதறியாமை நீங்கினர். அதுமுதற் சனகன் பிராமணனாக நன்கு மதிக்கப்பட்டான்'' என்று சொல்லப்பட்டது.

சாந்தோக்கிய உபநிடதம் ரு-வது பிரபாடகம், ௩-வது கண்டம், "சுவேதகேது ஆருணேயர் பாஞ்சால மன்னன் அவைக்களத்தே சென்றார். பிரவாகன சைவலி என்னும் அவ்வேந்தன் அவரை நோக்கிப் 'பிள்ளாய்! நின்றந்தை நினக்கு ஞானோப தேசஞ் செய்தனரா?' என்று கேட்டான். 'ஐயா! ஓம் அவர் செய்தனர்' என்று அவர் விடைகூறினர்.

(க)

'இந்நிலத்தினின்றும் மக்கள் எங்கு எழுகின்றனர், நீ அறிவையா?' என்று வேந்தன் வினவினன்; அதற்கு அவர் 'ஐயா, நான் அறியேன்' என்றார்.

'திரும்ப அவர் எங்கு செல்கின்ருர் அறிவையா?' என வினவினன்; அதற்கவர் 'ஐயா நான் அறியேன்' என இறுத்தார்; 'தேவயானத்திற்கும் பிதிர்யானத்திற்கும் எங்கே பேதமுண்டாகின்றது அறிவையா?' என வினவினன்; 'ஐயா நான் அறியேன்' என்ருர். (உ)

'மறுமையுலகம் ஏன் நிறைக்கப் படுவதில்லை அறிவையா?' என்று வினவினன்; அதற்கு அவர் 'அறியேன் ஐயா' என்ருர்; 'பஞ்சமாகுதியில் திரவப்பொருள்கள் ஏன் புருஷசப்தமெய்துகின்றன அறிவையா?' என்று வினவினன்; அதற்கவர் 'ஐயா நான் அறியேன்' என்ருர். (௩)

'அப்படியாயின் உபதேசம் பெற்றேனென்று ஏன் இங்கு வந்தாய்? ஒன்றுமறியாதவன் அறிவிக்கப் பட்டானென்று நீ எப்படிச் சொல்லலாம்?' என்ருன் அரசன். அதனைக் கேட்டலும் மிக்க விசனத்தோடும் தன் தந்தையிடம் திரும்பிப்போய் 'தந்தாய்! எனக்கொன்றும் உபதேசியாமலே, எல்லாம் உபதேசிக்கப்பட்டன வென்றீரே' என்ருன். (௪)

'அப்பொல்லாத அரசன் என்னை ஐந்து வினுக்கள் வினவினன், அவற்றுள் ஒன்றற்கேனும் என்னல் விடையிறுக்க முடியவில்லையே' என்ருன். அது கேட்ட தந்தை 'நீ சொன்ன அக் கேள்விகள் ஐந்தனுள் ஒன்றற்கேனும் எனக்கே விடை தெரியவில்லையே; அவை எனக்குத் தெரிந்தனவாயின் நினக்கேன் யான் சொல்லாமலிருப்பேன்?' என்று கூறினன். (ரு)

கௌதமகோத்திரத்தாரான அவர் தந்தை அவ்வரசன் அரண்மனைக்குப் போயினர். அவர் வருகையைக் கண்ட அரசன் விருந்தினர்க்குச் செய்யும் வழிபாடுகளெல்லாம் ஆற்றினன். மறுநாட் காலையில் அவர் அரசன் அவைக்களத்தே சென்றார். அரசன் அவரை நோக்கி, 'ஓ கௌதமரே! உலகத்துப் பொருள்களிற் சிறந்ததெதுவென்று நினைக்கின்றீரோ அதனைக் கேளும்' என்றான். அதற்கவர் 'உலகியற்பொருள்கள் எனக்கு வேண்டாம் அவை நின்பாலே யிருக்கட்டும். ஓ வேந்தனே! நீ என் புதல்வனைக் கேட்ட ஐந்து வினாக்களையும் எனக்கு விளக்கிச் சொல்லுதல் வேண்டும்' என்றார். (௬)

அதுகேட்டரசன் விசனமுடையானாய், 'என்னுடன் சிலநாள் இருக்கக்கடவீர்' என்று கட்டளையிட்டான். அது கழிந்தபின் அரசன் அவரை நோக்கி, 'நீர் இவ்வாறு விசாரணை செய்யப் புகுந்தமையானும், இதற்கு முன் பிராமணன் எவனும் இவ்விரகசியத்தை அறியானாகலானும், இவ்வுலகத்திலுள்ள எல்லா மக்களுள்ளும் ராஜந்யர்க்கு மாத்திரமே இதனை உபதேசிக்கும் உரிமையுண்டாகலானும் யாம் இதனை உமக்கு அறிவுறுத்துகின்றாம்' என்று உபதேசிக்கத் தொடங்கினான்'' என்று சொல்லப்பட்டது.

இன்னும் இவைபோல உபநிடதங்களில் ஆண்டாண்டு வருவனவெல்லாம் ஈண்டுக் காட்டலுறின் இது மிகவிரியுமென வஞ்சி விடுக்கின்றாம். இவை தம்மால் தேறப்படும் முடிபுரை யாதெனின், ராஜந்யர்

அல்லது அரசினியார் என்று ஆரியரால் அழைக்கப் பெற்ற பண்டைக்காலத் தமிழ் நன்மக்களே ஆரியப் பிராமணர்க்குத் தத்துவ ஞானோபதேசஞ்செய்து வந்தன ரென்பதேயாம் என்க. ஆகவே, உபநிடதம் தமிழாசிரியரால் ஆரியமொழியில் எழுதப்பட்டன வென்னுமுண்மை தெளிபொருளாய் நிலைநிறுத்தப் பட்டது. வேதாந்த சூத்திரம், சாங்கியம், நையாயிகம், வைசேடிகம், முதலியனவெல்லாம் வகுத்து நுண் பொருள் பொதுள எழுதினர் தமிழாசிரியரேயாமென் பதூஉம், புத்தசமயம் விளக்கிய கௌதமசாக்கியரும் தமிழாசிரியரேயா மென்பதூஉம் முல்லைப்பாட்டாராய்ச்சி, திருக்குறளாராய்ச்சியில் நன்கு விளக்கிக் காட்டினும். ஆண்டுக் காண்க. இவ்வாறு தத்துவஞானங்களும் அவை திருந்த விளக்கிய உபநிடதம் சிவாகம முதலி யனவும் தமிழர்க்கே உரியனவாய்ப் பின் ஆரியராற் றமிழரிடமிருந்து பெறப்பட்ட ஆரிய இரவற்பொரு ணூல்களாய் நிலைப்பவும், இஞ்ஞான்றை ஆரியர் அவை தமக்கே உரியனவெனவும், அவை தம்மைத் தமிழர் ஓதப்பெறுரெனவுங் கூறுதல் சிறுமகாரானும் எள்ளிநகையாடற்பாலதாம். இஞ்ஞான்றை ஆரியர் தமிழர் செய்த நன்றியைச் சிறிதும் ஓராது 'தீட்டின மரத்திற் கூர்பார்த்தல்' ஒப்பத் தமக்கு அறிவுகொளுத் திய பண்டைத் தமிழ் மக்கள் மரபினராம் நம்மனோர் பாற் செய்துபோதரும் படிற்றொழுக்கம் மிகப்பெரிது! அவர் படிற்றொழுக்க வியல்பு இனைத்தென்றறியாத நம்மனோரும் அவர் மயக்கவுரையில் விழுந்து அவமே யாகின்றார். இனியேனும் நம்மனோர் தம் பெருஞ்சிறப் புணர்ந்து ஆக்கமெய்துவாராக.

---

# பின் இணைப்பு[1]

## க. உயிர்களின் தோற்றம்

இந் நிலஉலகத்தில் உயிர்உள் பொருள்களும் உயிர்இல் பொருள்களும் ஆகிய இருவகையும் ஒருங்கு காணப்படுகின்றன. இவற்றுள், உயிர்உள் பொருள் களுக்குப் பயன்படுமுகத்தால் உயிர்இல் பொருள்கள் ஆராய்ந்தறியப்படுகின்றனவேயன்றி, இவை முன்னை யவற்றின் தொடர்பின்றி அங்ஙனம் அறியப்படுதலைக் காண்கிலேம். ஆகவே, உயிர்ப்பொருள்களைப்பற்றித் தெளிவான அறிவு பெற்ருல், அவ்வறிவு பெறுவார்க் கெல்லாம் அஃது அறிவும் இன்பமும் அளித்து, அவரது மண்ணுலக வாழ்க்கையை விண்ணுலக வாழ்க்கையோடொப்பச் செய்யுந் திறத்ததாம் என் பதனை அனைவரும் நினைவிற் பதித்தல் வேண்டும்.

இனி, இங்ஙனம் இன்றியமையாது ஆராய்ந்து அறியற்பாலனவாகிய உயிர்களோ எண்ணிறந்த கோடி யன; என்ருலும், அவை தம்மிற் புலனுகும் உணர்வின் அறிவின் பெருமை சிறுமை கண்டு, அவை தம்மை ஆறு தொகுதிகளாகப் பகுத்துப், பண்டைத் தமிழாசிரிய ராகிய தொல்காப்பியனுர் அளவுபடுத்தியிருக்கின்ருர். தொட்டாலுணரும் உணர்ச்சிமட்டும் உடைய ஓர் அறி வுயிர்களும் தொடுதலுடன் நாவினுற் சுவைத்துணரும்

---

1. நனிமிகப் பழங்காலத்து மக்கள் முதன்முதல் தோன்றி வாழ்ந்த இடம் தென்றமிழ்க் குமரிநாடே என வலியுறுத்தப்படு வதால் தமிழ் மொழியும், தமிழ் மக்களும், தமிழர் நாகரிகமுமே முன்னுள்ளன என்பதனை வலியுறுத்தி இந்நாலை விரித்தெழுத அடிகளார் தொடங்கியுள்ளார்கள் என்பது புலனுகின்றது. அத னுல் அதனைப் பின் இணைப்பாக ஈண்டுச் சேர்த்துள்ளாம்.

ஈர் அறிவுயிர்களும், தொடுதல் சுவைத்தலுடன் மோந் துணரும் மூக்குணர்வும் வாய்ந்த மூவறிவுயிர்களும், இம் மூன்றனுடன் கண்ணுற் கண்டுணருங் கண் ணுணர்வும் வாய்ந்த நாலறிவுயிர்களும், இந்நான்க னுடன் செவியாற் கேட்டுணருஞ் செவியுணர்வும் வாய்ந்த ஐயறிவுயிர்களும், இனி இவ்வைம்புலன்க ளால் அறிந்தவற்றை, நல்லதிது தீயதிது, இஃது இதனையொப்பது, இஃது இதனின் வேருவது எனப் பகுத்துக் காணும் மனவறிவும் ஒருங்குகெழுமிய ஆறறி வுயிர்களும், என ஆறு பெரும்பகுப்பில் எல்லா உயிர் களையும் அடக்கி, அவற்றிற்கு ஒவ்வொரு பகுப்பிலிருந் தும் ஒருசில உயிர்களையும், அவற்றின் அறிவியக்கத் தையும் எடுத்துக்காட்டியிருக்கின்ருர் ஆசிரியர்.[1] இவ் வாருக உயிர்களெல்லாவற்றையும், அவ்வவற்றின்கட் காணப்படும் அறிவின் ஏற்றத்தாழ்வு கண்டு, ஆறு வகையில் அடக்கிக்காட்டிய மிகப் பழைய நூல் தமிழ் மொழியிலுள்ள தொல்காப்பியத்தைத் தவிர, வேறெந்தப் பழைய மொழியிலும் எந்தப் பழைய நூலும் இல் லாமை கருத்திற் பதிக்கற்பாற்று. இதுகொண்டு, பழைய தமிழாசிரியரின் நுட்ப ஆராய்ச்சியறிவின் மாட்சி தெற்றென விளங்காநிற்கும்.

இனி, இங்ஙனம் பகுக்கப்பட்ட அறுவகை உயிர் களில், மனவறிவுடன் ஆறறிவுகூடிய மக்களே உயர்ந்த பிறப்பினர். அதனுல், ஆசிரியர் தொல்காப் பியனுர் மக்களை 'உயர்திணை' என்றும், மக்கள் அல்லாத ஏனை ஐந்தறிவுக்குட்பட்ட உயிர்களை 'அஃ றிணை' என்றும் வழங்கினுர்.[2]

1. தொல்காப்பியம், மரபியல், உஎ.
2. தொல்காப்பியம், சொல். க.

இனித், தொடுதலுணர்ச்சி ஒன்றேயுடைய புல்லும் மரனுமே முதன்முதற் றோன்றிய உயிர்களாகும். இந் நிலவுலகத்தின் மேற்பரப்பெல்லாங் கோடிக்கணக்கான ஆண்டுகளாகப் பனிப்பாறைகளால் மூடப்பட்டிருந்தன. அப் பனிப்பாறைகள் பகலவன் வெப்பத்தால் உருகிக் கரையக் கரைய, நீர்பெருகிப் பள்ளத்தாக்கான இடங்களில் நிரம்பிக்கொண்டு பரம்பவே, ஆறும் ஏரியும் சிறுகடல் பெருங்கடல்களுமாகிய நீர்நிலைகள் தோன்றலாயின.

பின்னர், இந் நீர்நிலைகளின் அடிப்படையில் ஓரறிவுயிர்களிற் கடைப்படியினவாகிய நீர்ப்பூண்டுகளும், ஈரறிவுயிர்களாகிய நத்தை, சங்கு, இப்பி, கிளிஞ்சில் முதலியனவும், மூவறிவினதாகிய அட்டையும், நான்கறிவினதாகிய நண்டும், ஐயறிவினவாகிய மீன்களும் பிற் பிற்காலங்களிற் றோன்றுவவாயின.

நீரின்கட்டோன்றிய நீர்ப்பூண்டுகள் காலஞ் செல்லச்செல்ல நிலத்தின்மேல் இவர்ந்து வளர, அவற்றையடுத்து வான்அளாவிய பரிய பரிய மரங்கள் தோன்றலும், அவை அடர்ந்த காடுகள் பல ஆங்காங்கு இம் மண்மிசைப் பொலிவவாயின. இத்தகைய காடுகளிற் பல பல்லாயிர ஆண்டுகளுக்குப்பின் மடிந்து நிலத்தின்கட் புதைந்துபோகவே, பட்டுப்போன அவைகளின் மரங்கள் பல நூற்றாண்டுகளுக்குப்பின் கரிகளாக உருமாறின; அங்ஙனம் மாறிய கரிகளே, இப்போது நிலத்தை அகழ்ந்த சுரங்கங்களிலிருந்தும் மிகுதியாய் எடுக்கப்பட்டு, நீராவி வண்டிகளையும், நீராவிக் கப்பல்களையும் விரைவாகச் செலுத்துதற்குப் பெரிதும் பயன்படுத்தப்படுகின்றன.

இனி, நிலத்தின்கண் இயங்கும் உயிர்களில் இருப்பன, ஊர்வன, நடப்புன, பறப்பன, நீந்துவனவாகிய எல்லா உயிர்களும் முதன் முதல் நீரின்கட்டோன்றிப் பிற் பிற்காலங்களிற்றும் நிலத்தின்மேல் ஏறிவந்து உயிர்வாழப்பெற்றன. இதற்குச் சான்றாக நீர்க்கோழியையும் நீராமையையும் உற்றுப் பார்மின்கள்! நீர்க்கோழி நீருள் அமிழ்ந்தி வாழவும்வல்லது, நிலத்தின் மேல் இயங்கவும்வல்லது, வானிற் பறந்துசெல்லவும் வல்லது. மற்று, நீராமை நீரில் நீந்தி உயிர்வாழ்தற்குத் துணைசெய்யும் செட்டைகள் வாய்ந்ததாயிருத்தல் போலவே, நிலஆமை நிலத்தின்மேல் நடமாடுதற்கேற்ற அடிகளுடன்கூடிய கால்கள் வாய்ந்திருத்தல் அறியற்பாலது. இன்னும் நிலத்தின்கண் உலவும் நாய், குதிரை, யானை, குரங்கு முதலான விலங்குகளோடொப்ப, நீர்நாய், நீர்க்குதிரை, நீர்யானை, நீர்க்குரங்கு, முதலான விலங்குகள் கடலின்கண் உலவா நிற்றலைக், கண்காட்சி நிலையங்களில் அவைதம்மிற் சில கொணர்ந்து வைக்கப்பட்டிருத்தலைக் கண்டு நன்கறியலாம்.

இன்னும், நிலத்தின்மேல் உள்ள உயிர்களைக் காட்டிலும் எத்தனையோ மடங்கு பெரிய உருவம் வாய்ந்த உயிர்கள், மக்கள் தோன்றாத அந்நாளிற் கடல் நீரிலும் மணல்வெளிகளிலும் இயங்கின. மக்கள் தோன்றிய பின்னுளிலும் அவ்விரண்டிலுங் காணப்பட்டு வருகின்றன.[1] நிலத்தின்மேல் உள்ள தேளை விட மிக மிகப் பெரிய உருவினவாகிய கடற்றேள்கள் ஒன்பதடி நீளம் உள்ளனவாய் அந்நாளில் தோன்றி யிருந்தன. அங்ஙனமே, மிகப் பரியவான சில விலங்கு

1. H. G. Well's 'The Outline of History, 1930, pp. 23, 42.

கள் எண்பத்து நான்கடி நீளமும், மற்றுஞ் சில நூறடி நீளமும் உள்ளனவாயிருந்தன. இஞ்ஞான்றுள்ள யானையைவிடப் பத்துப் பதினைந்துமடங்கு பெரிய உருவினவான பேரியானைகளும் அஞ்ஞான்றிருந்தன. ஆனாலும், இவ்விலங்குகளிற் பெரும்பாலன மக்கள் தோன்றுதற்கு முன்னமே மாண்டொழிந்தன. அவற்றுள், உயிர்மாண்டு பனிப்பாறைகளின் ஊடே கிடந்து புதைந்துபோனவை பின்நாளில் அப் பனிப்பாறைகள் கதிரவன் வெப்பத்தால் உருகிக் கரைந்துவிடவே, எத்தனையோ ஆயிர ஆண்டுகளுக்குமுன் மாண்டுபோன அவற்றின் முழுவுடம்பும் புத்தப் புதியனவாய்க் கண்டு எடுக்கப்பட்டிருக்கின்றன. பனிப்பாறைகள் இல்லாத இடங்களில் மாய்ந்தவைகளோ அங்குள்ள மண் கற்பாறைகளாய் இறுகிவிட அவற்றினிடையே கிடந்து தசை கழிந்து மட்கிப்போக, வெறும் எற்புக் கூடுகளாய் வெட்டி வெளியே எடுக்கப்பட்டுள்ளன.

இங்ஙனம், இருப்பன, ஊர்வன, நடப்பன, பறப்பன, நீந்துவனவாகிய சிற்றுயிர்கள் முதன்முதல் நீரிற்றோன்றி இயங்கிப், பின்னர் அவற்றிற் பல நிலத்தின்மேல் இவர்ந்து, வரவரப் பல்கி வாழலாயினாற்போலவே, மக்கள்யாக்கையினையுடைய உயிர்களும் முதலில் நீரின்கட்டோன்றிப், பின்னர் நிலத்தின்மேல் வந்து உயிர்வாழ்ந்து பெருகலாயினமையும் ஒருசில நிகழ்ச்சிகளாற் புலனாகின்றது. ஒருகால் மேல்நாட்டு மக்களாற் செலுத்தப்பட்டுச் சென்ற ஒரு மரக்கலம் ஒரு கடற்பகுதியிற் செல்லுங்கால், அங்குள்ள கடல்நீரினின்றும் மக்கள் வடிவினதாகிய ஓர் ஆண்உயிர், அம் மரக்கலத்தின்மேல் ஏறிவந்து, அதன் முன்அணியத்தில் நிறுத்தப்பட்டிருந்த ஒரு பெண்பாவை யுருவினைச்

சிறிதுநேரம் உற்றுநோக்கிக்கொண்டிருந்து, அக் கப்பல் மீகாமனும் பிறருந் தன்னைப் பிடிக்க முயன்ற போது, அக்கடல்நீரிற் குதித்து அமிழ்ந்திப்போன உண்மை வரலாற்றினை எமது சிறுவர்க்கான செந்தமிழ் என்னும் நூலில் எடுத்துக்காட்டியிருக்கின்றேம். இத் தகைய நிகழ்ச்சியிலிருந்து, கடல்நீரிலும் மக்கள் வடிவினவாகிய உயிர்கள் இயங்குதல் அறியப்படுகின்ற தன்றோ? இவ்வாறு எல்லா உயிர்களும் இவ்வூன் உடம்பிற் றோன்றுதற்கு இன்றியமையாத இடமாகிய கடல்நீரில் முதன்முதற் றோன்றியே, பன்னெடுங் காலங்களுக்குப் பிறகு மக்களும் நீர்வாழ்க்கையை விட்டு நிலவாழ்க்கையைக் கடைப்பிடிக்கலாயினரென்று உணர்தல் வேண்டும்.

அஃதுண்மையேயாயினும், உயிர்வாழ்க்கைக்கு இன்றியமையாது வேண்டப்படும் எல்லாக் கருவிகளும் ஒருங்குவாய்க்கப்பெற்ற இந்நிலத்தின்மிசை உயிர்கள் முதன்முதற் றோன்றாமல், நீரின்கண் முதன்முதற் றோன்றலானது என்னையெனிற், கூறுதும்: படைப் பின் துவக்கத்திலேயே இம் மண்ணுலகம் உயிர்களின் வாழ்க்கைக்கு ஏற்றதாய் இருந்தால், புன்முதல் மக்கள் ஈறான எல்லா உயிர்களும் இம் மட்பாங்கர் மிசையே தோன்றியிருக்கும். ஆனால், இந்நிலவுலகின் இயல்போ பல்லாயிரங்கோடி ஆண்டுகளுக்குமுன் இருந்த நிலை வேறு, இஞ்ஞான்றுள்ள நிலை முழுவதூஉம் வேறு.

வெய்யவன் மண்டிலம் ஒரு பெருநெருப்புத் திரளை யாய் அன்றும் இன்றும் விளங்காநிற்கின்றது. இது நினைத்தற்கும் இயலாக் கடுவிரைவுடன் சுழலா நிற்கை யில் இந்நிலமும், திங்கள், செவ்வாய், புதன், வியாழன்,

வெள்ளி, சனி முதலான கோள்களும் அவ்வெய்யவ னுகிய தீப்பிழம்பினின்றுந் தெறித்துப்போந்த நெருப் புப் பொறிகளேயாகும். சிறிய பொருள்களையே அறிந்து நுகர்தற்பான்மையவான கண் முதலான சிறுபொறிகள் மட்டுமே அமையப்பெற்றசிற்றறிவினராகிய நம்மனோர் கண்களுக்கு நாம் வாழும் இம்மண்ணுலகம் மிகப் பெரியதுபோற் காணப்படினும், உண்மையான் ஆராய்ந்து காண்பார்க்குக் கதிரவன் மண்டிலமே இந் நிலவுலகத்தைப் பார்க்கிலும் முந்நூற்று முப்பதினுயிர மடங்கு பெரியதாதல் விளங்குமென்று இஞ்ஞான்றை வான்நூலாசிரியர் கணக்குச் செய்திருக்கின்றனர்.[1] அதனுல், இம்மண்ணுலகங் கதிரவன் மண்டிலத்தி னின்றுந் தெறித்துப்போந்த ஒரு சிறு நெருப்புப் பொறியேயல்லால் வேறன்றுதல் தேர்ந்துணரற் பாற்று. அங்ஙனம் ஒரு நெருப்புப்பொறியாய் முதன் முதல் உண்டான இந்நிலவுலகு எத்தனையோ நூரு யிரம் ஆண்டுகளாய் வெம்மை குறைந்து ஆறி இறுகி வருகின்றது. இன்றுங்கூட இதன் உட்பகுதி அள விடப்படாத வெப்பம்வாய்ந்த தீக்குழம்பு உடையதாய்க் கொதித்துக்கொண்டிருக்கின்றது. இந்நிலத்தின் மைய மான இடத்தினூடு ஆங்காங்குள்ள எரிமலைகளின் புழைவழியே இத்தீக்குழம்பு ஒரோவொருகாற் கொதித் துப் பொங்கி மேலெழுந்து வழிந்துவிடுதல் உண்டு; இவ்வாறு வழிதலால் எரிமலைகளின் அடிவாரத்திலும் அண்மையிலும் உள்ள ஊர்களும் நகர்களும் எரிந்து சாம்பலாய்விடுகின்றன. கி. பி. ௵௪-ஆம் ஆண்டில் வெசூவியஸ் என்னும் எரிமலையினின்றும் பொங்கி வழிந்த தீக்குழம்பால் அதனை அடுத்திருந்த பெரிய

1. Outline of Modern Belief, Vol. I, p. 23.

நகரங்கள் எரிந்து சாம்பராயின; பதினெண்ணுயிரம் மக்களும் மடிந்துபோயினர்!

இங்ஙனம், உயிர்வாழ்க்கைக்குப் பேரிடர் பயப்ப தான தீவடிவினதாய் முதற்கண் இருந்தமையால், இந் நிலவுலகத்தின் மேற்பரப்பிற் பலகோடி ஆண்டுகள் வரையிற் புற்பூண்டுகள் முதல் மக்கள் ஈருன எத்தகைய உயிருந் தோன்ருவாயின. பிறகு, பன்னூருயிரம் ஆண்டுகளாக இந்நிலவுலகின் வெம்மை ஆறி வரவர, இதன் மேற்பரப்பு இறுக, இறுகிய கற்பாறையின் பள்ளத்தாக்கான இடங்களில் மழைநீர் நிரம்பி, ஏரி, சிறுகடல் பெருங்கடல் முதலான நீர்நிலைகளைத் தோற்று விக்கலாயிற்று.

அங்ஙனம் உண்டான நீர்நிலைகளின் அடிப்படை யில் நீர்ப்பூண்டுகளும், அவற்றின்பிற் பல நூற்ருண்டு கள் கழித்துப், பெருக்கக் கண்ணுடியின் உதவியின்றி நம் கட்புலன்களுக்குச் சிறிதும் புலனுகாத மிக நுண் ணிய உயிர்களுந் தோன்றுவவாயின. அவற்றின்பிற் பல நூற்ருண்டுகள் கழித்து நங் கட்புலன்களுக்குப் புலனுகும் ஈரறிவுயிர்களும், அவற்றின்பின் மூவறிவு, நாலறிவு ஐயறிவுடைய உயிர்களும், இறுதியாக ஆறறி வுயிர்களாகிய மக்களுந் தோன்றலாயினர். இங்ஙனம் நீரின்கட்டோன்றிய உயிர்களிற் பல நிலத்தின்மேல் இவர்ந்துவந்து உயிர்வாழ்தற்கு ஏற்றபடியாக, நீர் நிலைகளை அடுத்த நிலப்பகுதிகளிற் சிறியவும் பெரியவு மான புற்பூண்டுகளும், மரஞ்செடி கொடிகளும் உண் டாகி இலையும் பூவுங், காயுங் கனியுங், கிழங்குகளும் வித்துக்களும் ஆகிய உணவுப்பொருள்களை மிகுதியாக அளித்தன. உணவுப்பொருள்கள் மிகுந்து வரவே,

அவற்றை அயிலும் உயிர்களும் ஒன்று, பத்து, நூறு, ஆயிரம், பதினுயிரம், நூருயிரமாய்ப் பல்கலாயின.

இவ்வாருக, நிலத்தின் மேற்பரப்பில் நீர்த்தோற்றம், கற்பொடித்தோற்றம், புற்பூண்டுத்தோற்றம், சிற்றுயிர்த்தோற்றம் முதலான நிகழ்ச்சிகளெல்லாம் படிப்படியே யுண்டாகிப், பலகோடி ஆண்டுகள் சென்ற பின்னரேதான் மக்களுயிர்களின் தோற்றம் உளதாயிற்று. விலங்கின் யாக்கையில் நின்ற உயிர் பலகோடி யாண்டுகளாக அவ்வியாக்கைகளை விட்டுவிட்டுக் கடைப்படியாக மக்கள் யாக்கையில் வரலானது இற்றைக்கு ஐந்நூருயிர ஆண்டுகளுக்கு முன்னரேயன்றி, அதற்கு முன் மக்களுடம்புடைய எத்தகைய உயிருமே இல்லையென்று இத்துறையிற் பேருழைப்பெடுத்துப் பெரிதாராய்ந்த நிலநூல் உயிர்நூல்வல்ல மேல்நாட்டாசிரியர்கள் முடிவுகட்டி யிருக்கின்ருர்கள். ஆகவே, இம் மண்மிசைத் தோன்றிய உயிர்த்தொகைகளிற், கடைமுறையாகத் தோன்றியவை மக்களுடம்பு வாய்ந்த ஆறறிவுயிர்களேயென்றும், இவை தோன்றிய காலம் ஐந்நூருயிர ஆண்டுகளுக்குமேற் சென்றதாகாதென்றும் நினைவிற் பதித்தல் வேண்டும்.

## உ. மக்கள் முதன்முதற் ருேன்றிய இடம்

இனி, இந்நிலவுலகின் எந்தப் பகுதியில் முதன் முதல் எல்லா உயிர்களும் வாழத் துவங்கின என்பது ஆராயற்பாற்று. நீரைவிட்டு நிலத்தின்மேற் போந்த பின் உயிர்கள் பசியால் வாடி மடியாமல் நிலைப்படுதற்கு வேண்டியவை உணவுப்பண்டங்கள் அல்லவோ? ஆகவே, உணவுப்பண்டங்கள் முதன்முதல் எந்த இடத்

தில் மிகுதியாய்த் தோன்றிக் கிளர்ந்தனவோ, அந்த இடமே உயிர்கள் நன்கு உயிர்வாழ்ந்து பல்குதற்கு ஏற்ற பெருவளன் உடையதாதல் வேண்டுமென்பதை எவருமே அறிவர். இந்நிலவுலகின் வடமுனைப் பாங்கரும், இதன் தென்முனைப் பாங்கரும் அன்றும் இன்றும் பனிப்பாறைகளால் மூடப்பட்டிருத்தலின், அங்கே புற்பூண்டுகளும் மரஞ்செடி கொடிகளும் உண்டாவதில்லை. அவை யில்லையாகவே உயிர்வாழ்க்கைக்கு இன்றியமையா உணவுப்பண்டங்களும் அப்பகுதிகளிற் கிடைப்பதில்லை. ஆகவே, வடமுனை தென்முனைகளை நெருங்கிய நாடுகளில் மக்கள் முதன்முதற் றோன்றி வாழ்ந்திருத்தல் இயலாது.

பின்னர், அவ் வடமுனை தென்முனைகளுக்கு மிக விலகி, இந்நிலத்திற்கு நடுவணதான குமரி நாடே, பகல் இராப்பொழுதுகளும் வெப்பதட்பங்களும் ஒத்த நிலையில் இயற்கையே பொருந்தப்பெற்று, மரஞ் செடி கொடிகள் அடர்ந்து வளர்ந்து, நெல், கோதுமை, பல்வகைப் பயறுகள், தீஞ்சுவைக் காய்கனி கிழங்குகள் முதலான உணவுப் பண்டங்களை வழங்குதலின், ஈதொன்றே மக்களும் பிற உயிர்களும் முதன்முதற் றோன்றி உயிர்வாழ்ந்து, பல்கிப் பலமுகமாய்ப் பரவுதற்கு இடஞ்செய்ததென்பது ஆழ்ந்த ஆராய்ச்சியால் நன்கு விளங்கா நிற்கின்றது.

இவ்வியல்பினதான குமரிநாடே மக்கட்டோற்றத்திற்கு முதற்றாயகமாய் இருந்த உண்மையினை மேனாட்டாசிரியர்கள் பலமுகமாய்ப் பரக்க ஆராய்ந்து முடிபு கட்டியிருக்கின்றார்கள்.

மறைமலையடிகளாரின்

## தனிச் செந்தமிழ் நூல்கள்

| | ரூ. | காசு |
|---|---|---|
| சாகுந்தல நாடகம் | | |
| விளக்க உரைக் குறிப்புக்களுடன் | 3 | 25 |
| ,, கலிக்காக்கட்டு | 4 | 25 |
| சாகுந்தல நாடக ஆராய்ச்சி | 2 | 50 |
| இளைஞர்க்கான இன்றமிழ் | 2 | 50 |
| ,, கலிக்காக்கட்டு | 3 | 25 |
| சிறுவர்க்கான செந்தமிழ் | 2 | 25 |
| ,, கலிக்காக்கட்டு | 3 | 00 |
| மரணத்தின்பின் மனிதர்நிலை | 3 | 25 |
| தமிழர் மதம் | 5 | 00 |
| திருவொற்றிமுருகர் மும்மணிக்கோவையுரை | 5 | 00 |
| முல்லைப்பாட்டு ஆராய்ச்சியுரை | 2 | 00 |
| பட்டினப்பாலை ஆராய்ச்சியுரை | 2 | 00 |
| ,, கலிக்காக்கட்டு | 2 | 75 |
| கடவுள் நிலைக்கு மாறான கொள்கைகள் | | |
| சைவம் ஆகா | 1 | 75 |
| பழந்தமிழ்க் கொள்கையே சைவசமயம் | 2 | 00 |
| சைவசித்தாந்த ஞானபோதம் | 4 | 00 |
| சிந்தனைக் கட்டுரைகள் | 2 | 00 |
| குமுதவல்லி நாகநாட்டரசி | 4 | 00 |
| தொலைவிலுணர்தல் | 4 | 00 |
| கோகிலாம்பாள் கடிதங்கள் | 6 | 00 |
| முற்கால பிற்காலத் தமிழ்ப் புலவோர் | 2 | 25 |
| சோமசுந்தரக் காஞ்சியாக்கம் | 1 | 50 |
| சோமசுந்தர நாயகர் வரலாறு | 1 | 50 |
| வேளாளர் நாகரிகம் | 2 | 00 |
| சாதி வேற்றுமையும் போலிச் சைவரும் | 2 | 00 |
| ,, கலிக்காக்கட்டு | 2 | 75 |
| மனிதவசியம் அல்லது மனக்கவர்ச்சி | 4 | 00 |
| ,, கலிக்காக்கட்டு | 5 | 00 |

---

த. திருநாவுக்கரசு,

